உ
சிவமயம்.
மகாகணபதே நம:
திருச்சிற்றம்பலம்.

# அளகை
# உமையம்மை மாலை
# உமாவீரசேகரனிரட்டைமணிமாலை
# வீரசேகரன் மும்மணி மாலை
# முதல்வன் முறையீடு.



இது
**புதுவயல்**
திருவாளர் நா அ. அண்ணாமலைச்செட்டியார்
கனிஷ்ட குமாரர்
**சண்முகச் செட்டியாரவர்களால்**
பாடப்பெற்றது.



காரைக்குடி,
சைவாபிமானத் திருவாளர்
**சேவி. அ. மெ. மெய்யப்பச்செட்டியாரவர்கள்**
பொருளுதவியால் அச்சியற்றி வெளியிடலாயின



வெகுதான்ய௵ தை௴
**1939.**
**நகரத்தார் பிரஸ், கண்டனூர்.**





நூலாசிரியர் .

**சண்முகச் செட்டியார்**

சாலிவாகன சகம் 1795 ஸ்ரீமுக வருஷம் ஐப்பசி மீ 13உ சோமவாரம்
பூர்வ சஷ்டி பூராட நக்ஷத்திரத்தில் ஜெனனம்.

உ

சிவமயம்.

மகாகணபதே நம:

# நூன்முகம்.

வாழ்க வையகம் மன்னுக சைவம்

ஐயன்மீர்,

மணியும் பொன்னும் வாரிக்கொழிக்குந்
திரைமலி கடல்சூழ் ஞாலத்து

பெறுதற்கரிய பேருகயாங் கண்டது மக்கட் பிறப்பேயாகும் அம்மக்கட் பிறப்பே மேலாய வீட்டின்பம் பெறுதற்கு இன்றியமையாச் சாதனமாமென்பதொருதலை.

ஆகவே, மக்கட்கென விதித்த அறங்களோ அனந்தமாகும்.

அவை வேதாகம ஸ்மிருதி, புராணேதிகாசமாதிய முதனூல் வழிநூல், சார்பு நூல்களால் விரிக்கப்பெற்றுள.

அஃதிருவகைத்தாய்ப் பதிதர்மம், பசுதர்மமெனப் பகுத்துணர்வதாகும். பசுக்களையாட்கொள்ளுந்திறம் பதிக்கேயாதலாற் பதிதர்மமே யாமுணர்தற்பாற்று.

அறன்வலியுறுத்த மேலோர் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனச் சோபான முறையிற்கூறி, அதுவும் பக்திவசத்தராய்ச்செய்தல் கடனென விதித்துத் தாமும் ஒழுகிக் காட்டியுள்ளார்கள்.

இனத்தோடினம் பயிலுமென்பது வெள்ளிடை.

அன்புருவாய சிவத்தோடு கலத்தற்குத் தாமும் அன்புருவாதலை முதற்படி.

அக்கருத்துட்கொண்ட மேதக்கபெரியார் பல்லாயிரவர் பல வாயில்களிற் சிவப்பணிசெய்துள்ளார்கள்.

அவற்றுட் காலங்கருதாது இடநோக்காது பக்திவசப்பட்டு பரவசராய்ப் பாடுதலையே தந்தொழிலாகக் கொண்டொழுகிய அடியாரருட்டிறம் ஏழைச் சிறியேனாலியம்புந்தரத்ததன்று.

எனினும் கற்றல், கேட்டல், அறிவு, ஒழுக்கம் ஒன்றுமில்லாச் சிறியேன் மனத்துச் சிவபெருமானாற் றூண்டப்பெற்றெழுந்த ஆசைக் கயிற்றிற் கட்டுண்டு பிரபந்தங்கள் பாடத் துணிந்தேன்.

இங்கு, கல்லாலெறிதலையுஞ் சொல்லாற்றுதித்தலையும் ஒப்ப நோக்கி யொருப்பாடையுந் தயாபரனுமெங் கடவுள் வீரசேகரப் பெருமான் தந்தோட்கணியாக்கிக் கொள்ளுவானென்னுமுறுதிப்

பாட்டால் அளகையட்டப் பிரபந்தம்பாடி மற்றும், விநாயகன், முருகன்மீது ஐந்து நூல்களியற்றியும் ஒருசேரத் தொகுத்து அச்சிடுவித்து வெளியிட்டுள்ளேன்.

அதுபோழ்து சைவாபிமானமுந் தமிழபிவிருத்தி நோக்கமும் சிவத்தொண்டுந் தம்மெய்ப்பாடெனமேற்கொண்டொழுகுந் திருவாளர்களான கண்டனூர், சித. பழ. ராம. இராமசாமிச் செட்டியாரவர்கள் ரூ. 150—0—0ம், புதுவயல் வடு. மு. ராம. மு. இராமநாதச்செட்டியாரவர்கள் ரூ. 100—0—0ம், இராயவரம் ராம. அரு. லெ. இலக்குமணச்செட்டியாரவர்கள் ரூ. 30—0—0ம் தந்துதவினர்கள்.

அது காலத்தாற் செய்த நன்றியாகி, ஞாலத்தின் மாணப் பெரிதாய் நின்றுலவியது.

மேற்படி பிரபந்தத்தை யான் அரங்கேற்ற எண்ணியபோது எமதூர் நகரத்தாரென்னைப் பொருட்படுத்தித் தங்கள் பொருட் செலவில் அரங்கேற்று விழாவை நடத்த முன்வந்து எல்லாவகையாலுஞ் சிரோங்க தாதுஷு ஆவணிமீ 20உ யன்று ஸ்ரீ வீரசேகரப்பெருமான் சந்நிதியில் திருவாளர் அ. இராமநாதச்செட்டியாரவர்கள் தலைமையில் கற்றோர் குழுவில் விழாவை நடத்தி யெனக்குப்பேரின்பமூட்டினர்கள். இன்னோரன்ன வுதவியாளர்களுக்கும் அச்சிடுங்கால் உதவிபுரிந்த நண்பர்களுக்கும் ஸ்ரீ வீரசேகரன்றிருவருள்புரியும் வண்ணம் வேண்டுகின்றேன். நிற்க

சென்ற வருடம் கண்ணில் நோய்கண்டு ஒளிமழுங்கிக் கலக்குற்றபோது அருமருந்தாய அன்னை உமையம்மை மீது ஒரு மாலை பாடிக் கண் பிரகாசிக்கக்கண்டுதொடர்பாய் உமாவீரசேகரனிரட்டைமணி மாலையும், வீரசேகரன் மும்மணி மாலையும் முதல்வன் முறையீடும் பாடிக் கையெட்டுப்பிரதி செய்து அச்சிடுவதற்கு யெதிர்நோக்கியிருந்தேன்.

இறைவனுற்றுண்டப்பெற்றுச் சிவநேசச் செல்வர் காரைக்குடி திருவாளர் சேவி. அ. மெ. மெய்யப்பச்செட்டியாரவர்கள் வலிந்து வந்து அச்சிட்டுதவுவதாகத் தெரிவித்தார்கள். அவ்வாறே அவர்கள் பொருளுதவியால் இப் பிரபந்தங்களை அச்சியற்றி வெளியிட்டுள்ளேன்.

எம் கடவுள் உமாவீரசேகரன் அன்னார்க்கு அருள்புரிவான் வேண்டுகின்றேன்.

எனது நன்றி யெல்லார்க்கும் உரியதாகுக.

சுபம்

புதுவயல்,<br>வெகுதான்யஷு<br>தைமீ 27உ

இங்ஙன்,

**நா. அ. ச. சண்முகம்.**



உ

சிவமயம்.

மகாகணபதே நம:

# அளகை உமையம்மை மாலை



## காப்பு.

மாவளகை வாழுமைமேன் மாலைதமிழ்ச் சொல்லாய்ந்து
பாவடிமுப் பாஞனென்று பாடுதற்குத் — தாவரமுஞ்
சங்கமமுந் தோற்றிச் சரிக்கு முதற்பொருளாம்
ஐங்கரவந் தெற்காத் தருள்.

## நூல்.

கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை யாலிரு கட்குமொளி
விண்ணிற் சிறந்த பகல்போற் றுலங்க விளக்கியருள்
பண்ணிற் சிறந்த மறையோடு செந்தமிழ்ப் பாட்டியலும்
மண்ணிற் சிறந்த வளகையி னித்தம் வளருமையே. (1)

வளரும் பிறையி னொளிவீசி யென்கண் மணிவிளங்கக்
கிளரும் பயோதரம் போற்றயை காட்டிக் கிளியருள்செய்
தளருங் குழவிக் குறுந்துணை யன்புசெய் தள்ளையன்றோ
விளருந் தளவ நகையா யளகை விளங்குமையே. (2)

உமையே நினதடி தஞ்சம்புக் கேனளி யூற்றுமலர்
தமையே நிகர்த்தவென் கட்குமுன் போலொளி தந்தருள்வாய்
நிமையே யெனநின்று காத்தலுன் பாரம் நிரஞ்சனிபொற்
கமையே பொறுத்த வழகி யளகைக் கவுரியின்றே. (3)

கவுரிநின் சிந்தா மரகத மேனிக் கவினுமென்றுட்
பவுரியுங் கண்டு தொழுமாறு கட்கொளி பாயவருள்
சவுரியும் பூவுறை கோனுந் தொழும்பத சங்கரியிக்
கவுரியில் வானக ரொத்தோங் களகையிற் காரிகையே. (4)

காரிற் கரிய குழலணங் கேவினைக் காடெறிந்து
பாரித் துநல்வர மீந்திரு கட்கொளி பாலித்தருள்
பேரிற் பயின்ற பொரிதாங் கெயிற்புறம் பூம்பொழில்கள்
தாரித் தளியின மூட்டு மளகையிற் சங்கரியே. (5)

சங்கரி சோதரி தாதான் மியமாய்ச் சகங்கலந்தாய்
பொங்கரி வாகினி யென்னிரு கண்ணோயைப் பொடித்தருள்வாய்
வெங்கரி போர்த்த விடையோ னிடந்திகழ் வேதநடச்
சங்கரி யெந்த மளகையில் வாழுஞ் சதாநந்தியே. (6)

ஆனந்த வாரியின் மூழ்கித் தினம்பணி யாற்றவைத்த
மீனந்த வாள்விழி மாதேயென் கட்கொளி மேவவருள்
கோனந்த மாதியில் லாப்பரஞ் சோதியிற் கூடிவினைப்
பானந்த வன்பரைக் காக்கு மளகைப் பராபரையே. (7)

பரையோல மோலமென் பார்க்குத வுந்தனிப் பண்புகண்டேன்
விரையோதி யோலமென் றேன்றமி யேன்கண் மிளிரவருள்
நரையோதி மங்கலை வாணியில் வாவி நளினமன்னும்
வரையோகர் முத்தி வளர்க்கு மளகை மடமயிலே. (8)

மயிலும் படைத்தன தோகையிற் கண்ணொளி வாய்த்துலகிற்
பயிலுந் திருக்கண்கள் வேண்டுங் கடையனைப் பாலித்தரு
ளயிலுந் தமர்விழி யார்நட்ட மாடு மரங்கின்மணிக்
குயிலுங் கிளியு மிசைகூ றளகையிற் கோமளமே. (9)

கோமளை யன்பரை முத்தியிற் சேர்க்குங் குடிலையுருச்
சாமளை யஞ்சலென் றுட்கொண்டு கட்கொளி தந்தருள்வாய்
தேமளை யந்துவர் வாயிட் டவனயன் றேவரெலாம்
யாமளை யென்றடி போற்று மளகையில் யாதவியே. (10)

யாதந் தருநறும் பாலிற் சுவைமிகு யாமளையெம்
பூதந் தருமுடற் கேற்றங்கண் ணுமொளி பூப்பவருள்
சூதந் தருகனிக் கம்பரத் தைந்தரு தூவுமலர்ச்
சீதந் தருபொழில் சூழு மளகைச் சிவையுவந்தே. (11)

உவப்பக் கருணை மழைசிந்து தெய்வமென் றோதுமுரை
நிவப்பத் தருணமி தாலென்றன் கட்கொளி நீடவருள்
சிவப்பற் றுடையமெய்ஞ் ஞானிக் கிருவினை தேய்த்துவரும்
பவப்பற் றறுக்கு மளகைப் பிராட்டியெம் பார்ப்பதியே. (12)

பார்ப்பதி மேனி பகிர்ந்தாடு மாமயில் பாலனுடல்
வேர்ப்பது கண்டிலை யோவொளி யென்றன் விழிக்கருள்வாய்
நீர்ப்பது மந்தரு வார்க்குஞ்செந் தேனைக்கை நீட்டிவிரித்
தேற்பது போற்கவி னூரு மளகை யிறைமகளே. (13)

இறையா யுடல்பொரு ளாவிதந் தேனுவந் தேற்றனைபொற்
சிறையாடு மாமயி லேயொளிர்க் தென்கண் சிறக்கவருள்
மறையா கமத்து ளுரையா யணுவினு மாதிரத்து
முறையாதி தேவி யெழிலா ரளகை யுமையணங்கே. (14)

அணங்கடி யார்க்குமுன் வந்தாள்கை நின்ற னருங்குணமென்
குணங்கடி தாயினுந் தாண்மற வேன்கண் குளிரவருள்
மணங்கம ழோடையிற் காட்டானை பெய்த மதங்கலந்து
நிணங்கனிந் தால மடைபா யளகை நிரந்தரியே. (15)

தரியே னுயிர்வினை காத்திரங் காயெனிற் றத்தைமொழி
யரியேறு மான்விழி யேழைகட் காரொளி யாக்கியருள்
புரியேறு வார்குழ லாச்சியர் சுற்றும் புடைவைகொண்ட
அரியேக மார்தரு தங்கா யளகையி லாரணியே. (16)

ஆரணி யந்தரி யம்பிகை சுந்தரி யம்மைசெகத்
காரணி பேரொளி தந்தேழை கண்ணிலை காத்தருள்வாய்
தோரணி நின்றணி செய்யுந் தெருவளர் தெங்குகள்வா
னாரணி நல்ல பலமீ னளகை யுருத்திரையே. (17)

உருத்திரித் தாய்கருச் சேராமல் வேடனை யோம்புமெந்தை
கருத்திருக் கும்மணி யேயொளி கண்ணிற் கலப்பவருள்
செருத்தல்சொட் டும்பயம் வாவியிற் கூடித் திருவைகுந்தத்
தொருத்தனத் துங்கடல் போலா ரளகையி லொப்பனையே. (18)

ஒப்பனை செப்பவொண் ணுப்பரஞ் சோதியி னுள்ளொளியா
யெய்ப்பற வெங்குங் கலந்தாயென் கட்கொளி யீந்தருள்வாய்
மைப்படு சோலை வருக்கைக் கனிமுசு வாங்கிமந்திக்
கொப்பர வாக வகிர்ந்தூட் டளகை யுமையினிதே. (19)

இனிதந் தரவயி ராணிபொன் னுமக ளேர்முடிக்குப்
புனிதந் தருபத மாதே யொளிகட் பொலியவருள்
கனிதந் தழைத்து விருந்தோம்பு தண்டலைக் கள்ளையுண்டு
நனிதந்த கேசரம் பண்பா டளகை நவநிதியே. (20)

நிதியவிழ்க் குந்தமிழ்ப் பாவாக்கி யன்புசெய் நீலிநித்தங்
கதியமைக் குங்கரத் தாயொளி யென்விழி காட்டியருள்
பதியமைக் குங்குழ லாருட் டகிற்புகை பாய்ந்துமழைப்
பொதியவிழ்க் கும்புய றுறும் மளகையிற் பூங்கொடியே. (21)

பூவிற் பழகி யருட்டேன் பிலிற்றுகட் பூவையெந்த
மாவிக் கருந்துணை யேகண் மணிக்கொளி யாக்கியருள்
வாவிக் கயல்குரு கென்றஞ்சத் தாழை மடல்விரிந்து
தூவிப் பசும்பொ னிறைக்கு மளகைச் சுடர்மணியே. (22)

மணிக்குத் திகழொளி போலண்ட மெல்லாம் வயங்கியன்பர்
பிணிக்குத் தருமருந் தானவித் தேகண் பிறங்கவருள்
பணிக்குப் பணிதந்து பல்லாண்டு பத்தரைப் பாலிக்குநல்
லணிக்குச் சிறந்த நகரா மளகை யமலையின்றே. (23)

அமலை தருங்கடற் பார்பெற்ற வல்லிவெள் ளன்னமுஞ்செங்
கமலையுந் தொண்டுசெய் தாயே விழித்துணை காத்தருள்வா
யமலை தருங்கொடி யார்கொடி காட்டி யழைத்தமலைக்
கமலைவி னேரிய சீரா ரளகைக் கருப்பொருளே. (24)

கருவுற் றயருஞ் சிசுவுக்குந் தந்தனை கண்களரு
வுருவுற் றுலகரு ளம்மேயென் கட்கொளி யோங்கவருள்
தெருவிற் சிறுவிடைமைத்திளை யார்மணஞ் செய்துமணி
யுருவிற் றிருவிளக் கேற்று மளகையி லொண்டொடியே (25)

தொடியேறு பாணியிற் சூலேந்தி வெவ்வரி தோன்றியொன்னார்க்
கிடியேறு போன்ற பரையே யொளிவிழிக் கெய்தவருள்
கடியேறு சோலையில் வாழ்சிறை முப்புடைக் காய்சுமந்து
கொடியேறிக் கூத்தியர் போலா டளகைக் குயின்மொழியே (26)

குயிலிற் சிறந்த கொடைதந் துவந்தெங் குடிபுரந்தா
யயிலிற் பரந்த விழிமா தொளிகட் கமைத்தருள்வாய்
வெயிலிற் கரிந்த விடநாகப் பார்ப்பை மெலிவகற்றித்
துயிலிற் புரிந்து மயிலோம் பளகைச் சுரிகுழலே (27)

குழையோ டரிவிழி வாணித் திலநகை கொவ்வைச்செவ்வாய்
மழையோதி மேனி மரகதங் கண்டு வணங்கவரு
ளுழையோ டரிமத குஞ்சரம் புல்லி யுறவுகொண்டு
தழையோக ரிற்பணி யாற்று மளகைத் தயாபரியே (28)

தயாபரி யென்றுங் கெடாமுத லுன்றன் சரண்புகுந்தேன்
வியாபகி விண்மணி போலொளி கண்ணில் விரவவருள்
வயாவரித் தாமரை மேலுயிர்த் தன்னம் வளர்த்து நத்திற்
குயாவரிப் பால்வாங்கி வார்த்தூட் டளகைக் குமரியின்றே (29)

குமரி சடாதர னேராடு தோகைக் குலமயில்விற்
சமரி தயாபரி வாள்விழிக் காரருள் சாலவருள்
கமரி னராமுடி மாணிக்கம் வீசொளிக் கான்மதிதோய்ந்
தமரி வராகி குடையா மளகை யயில்விழியே (30)

அயிரா வணப்பெரு மான்வீர சேகர னம்பதிக்கோ
ருயிராய் நிறையுமை யம்மே விழிகட் கொளியருள்வாய்
தயிராடை விற்கு மிடைச்சியர் கொல்லைத் தருச்சினையிற்
கயிராசி லூசலுகைத்தா டளகைக் கயற்கண்ணியே (31)

## தனி விருத்தம்.

பண்கொண்ட வாயிரத் தாயிரஞ் சாகைகள்
பரப்பியா ரணங்க ளன்றன்
பதபங் கயந்துதித் தோகையுற் றெருசிறை
படர்ந்துபுக ழோதி நிற்க
விண்கொண்ட முப்பத்து முக்கோடி தேவர்பணி
மேவியருள் வேண்டி நிற்க
வீரசே கரனுடன் மருவிமா மணியொளி
விரித்திடுந் தவிசி ருந்தெம்
மண்கொண்ட தவவலியின் வேண்டுவார் வேண்டுவர
மாறாது பொழியு முகில்போல்
வாரிக் கொடுத்தம்மை யுதவுகரு வித்தான
மாதாசி யிமைய மயிலே
கண்கொண்ட கருணைவிழி யாநந்த மூழ்கிநான்
கழல்கண்டு போற்ற வருள்வாய்
காமாட்சி வாமாட்சி யடியருள மேயாட்சி
கைக்கொண்ட வளகை யுமையே

முற்றுப் பெற்றது.





உ

சிவமயம்.

மகாகணபதே நம:

# அளகை
# உமா வீரசேகரனிரட்டைமணி மாலை.

## காப்பு

சங்கீன்ற முத்தைவெண் ணுரைகள் காத்தடை தான்கிடக்குங்
கோங்கீன்ற தாமரை யாய்ந்துண்டு வண்டர் குலவளகை
தங்கீன்ற மாதுமைக் கத்தனுக் கைங்கரன் ருள்வணங்கி
யங்கீன் றிரட்டை மணிமாலை யோதுவ னன்புகொண்டே.

## உமையம்மை.

பூவவிழ்க்குந் தேன்போற் பொழிகருணைக் கண்காட்டித்
தாவிலருள் செய்தாட்கொ டற்பரையே—மாவளரு
மெந்த மளகை யிறைவிசிறி யேன்பிணிகள்
நந்தமருந் தீவாய் நயந்து. (1)

## வீரசேகரன்.

நயம்புரிவார் போற்பேசித் தன்னலம்பெற் றுய்தியுற்றும்
நடுப்பே ணுது
தியங்கிமன முழல்போது நட்டாரைக் கைவிடுமச்
சிறியார் தம்மைப்
புயங்கமென விலங்கவருள் புரியளகைப் பதிமேய
புனிதா வெம்பாற்
பயன்கருதி வருமடியார் வேட்கையறத் தரவீகை
பாலிப் பாயே. (2)

### உமையம்மை.

பாலிப்பா யெம்மைப் பசுங்கிளியே மைவிழியாற்
கோலிப்பார்த் தாண்டு குறைபோக்கி—நாலிப்பா
ரேத்து மளகை யிமையமயி லேயாக்கஞ்
சேர்த்துன் னருண்மிகவே செய்து. (3)

### வீரசேகரன்.

செய்தொழில்க ளத்தனையு முளச்செருக்கா னின்னேயஞ்
சிறிதும் பற்று
துய்திபெருக் கடையர்தமைக் கனவினிலு நேசமுறு
தான்றன் போற்றிப்
பெய்துமல ரிட்டுவணங் கடியாருக் கேவல்செய்து
பிழைதீர்த் துய்ய
அய்தளகை வளர்வீர சேகரநான் விழைகின்றே
னருத்தங் காட்டே. (4)

### உமையம்மை.

காட்டாகி யெல்லாமாங் கன்னிகயற் கண்ணியுன்றன்
தாட்டா மரைவணங்குந் தாசனியான்—வேட்டாசை
சித்தங் களிக்கவருள் தேவியுமா சீரளகை
யுத்தமியாட் கொண்டாண் டுவந்து. (5)

### வீரசேகரன்.

உத்தமத் துறவி னின்றே யுறுதவஞ் செய்த மேன்மைச்
சித்தருக் கேவல்செய்யாச் சிறியனே னெனினு நாயேன்
பத்தரை மாற்றுப் பொன்னேர் பதமலர் மறக்கே னெந்தா
யித்தரைக் காய வாழ்க்கை யினிதரு ளளகை வேந்தே. (6)

### உமையம்மை.

அளகைக்கோன் வானத் தமரா பதிக்கோன்
புளகப் பெரும்போர்வை போர்ப்பத்—தளகர்த்த
ஞானவேலை யளித்தவருட் டாயளகை
மானு டருவாண் மகம். (7)

### வீரசேகரன்.

மகம்பலசெய் தந்தணர்மூ வாயிரவர் பரவுதில்லை
வனத்தி னண்ணி
யுகம்பலவாய்ப் பதஞ்சலியா தாடுநட ராசனெம்மை
யுவந்தே யூட்ட
இகம்பரிவுற் றெழுகடல்போற் கருணைசுரந் தளகைதனி
லிறைகொண் டுற்றான்
சகம்பயிலு மாலிடர்கா டாகமற வுண்டுபவந்
தணிவீ ரின்றே. (8)

### உமையம்மை.

தணியா மனக்கவலை சார்வறுமை தேகப்
பிணியாவுந் தீச்சருகாம் பேரா—வணியாரும்
பூம்பொழில்கள் சூழளகைப் புத்தமுதே யென்றொருகால்
நாம்பொருந்தி யன்பொடுசொன் னால். (9)

### வீரசேகரன்.

நாலாய பழமறைகள் காணுமற் றேடியெய்த்து
நலிவுற் றேங்கத்
தோலாத மெய்யடியார் தம்மனத்தில் வீற்றிருக்குந்
தொல்லோ யண்டர்க்
காலால முண்டமைத்த மணிகண்டா வளகைநக
ரத்தா நெஞ்சில்
வேலாய படைபட்டா லெனவருத்தும் வறுமைதனை
விலக்கி யாளே. (10)

### உமையம்மை.

ஆளாவா ரண்ட ரயன்றிருமா லெண்ணவஞ்சேர்
கோளாவார் சித்தர் குழுமுனிவர்—கேளாவார்
பொன்னிமயந் தென்றமிழ்க்கோன் பொன்மாலை சூர்ப்பிணவாங்
கன்னியுமைக் கெம்மளகை காண் (11)

### வீரசேகரன்.

காணாமல் வாடுபயிர் கார்கண்டு தழைப்பனபோற் கபடொன்
[றில்லா
தேணாநின்னடியா ரிருக்கைகண் டவர்க்கருத்தி யிறும்பூதெய்த
ஆணாகிப் பெண்ணாகி யலியாகி யல்லனவா யகில மெங்குந்
தோணாம னின்றருள்வோ யொருவரந்தா வளகைவலஞ் சூழ்ந்
[தேறனே (12)

### உமையம்மை.

சூழ்ந்தே னுமைநாமஞ் சொல்லிவல முன்னின்று
தாழ்ந்தே னடிபணிந்து தள்ளருநோய்—போழ்ந்தின்பம்
பெற்றேனென் னார்தம் பிழைகடிந்தேன் வீட்டுநெறி
யுற்றே னளகை யுவந்து. (13)

### வீரசேகரன்.

உவந்தனிமைத் தொண்டாற்றித் திருப்பணிசெய் தருந்தனமீய்ந்
துவகை பூத்து
நவந்தருமா புண்ணியங்கைக் கொண்டுய்ந்த பெரியோர்க
ணகைப்ப முன்னைப்
பவந்தனினற் றவம்புரியே னாயிடினு மிப்பிறப்பிற்
பழியொன் றேந்து
மவந்தனைநான் செய்தறியே னருடருவா யளகையம்மா
னபய மீய்ந்தே. (14)

### உமையம்மை.

ஈய்ந்தாய் மணிவள்ளத் தின்பநிறை வாம்ஞானந்
தோய்ந்தார மாமுலைப்பா ரோணிபுரத்—தாய்ந்ததமிழ்த்
தோடுடைய சொற்றாற்குத் தோமறுபாப் பாடவெற்கும்
பீடுறுபா ருவளகைப் பெண். (15)

### வீரசேகரன்.

பெண்ணொருபால் வைத்துகந்துஞ் சித்தமயல் பற்றாத
பெரியோய் நால்வர்க்
கெண்ணொருமா வேதத்தின் பொருள்காட்டி யோகமுற்றா
லிருந்த வெந்தாய்

பண்ணொடுசெந் தமிழ்பாடு நெறியன்றி மற்றறியேன்
பற்றுன் றில்லேன்
கண்ணொழுகு திருவருணீர்க் கடலாட வருளளகைக்
கருணைக் குன்றே. (16)

## உமையம்மை.

குன்றாத தவஹிமயக் கோன்மகளாய்ப் பெற்றானீண்
டெந்தாயாய்ப் பெற்றே னெழில்பெற்றே—னன்றாயிற்
குற்றம் பொறுப்பாள் குணஞ்செய்வாள் சேய்ப்பரிவிற்
செற்றஞ்செய் யாளளகைத் தே. (17)

## வீரசேகரன்.

தேமணக்கும் பூங்கொன்றைத் தாரிரக்க வெள்ளனம் போய்ச்
செறுச்சூழ் கஞ்சப்
பூமணக்கு மனம்பயின்று குலவினவா லைங்கணைவேள்
போர்செய் தாற்றான்
காமணக்குங் கரதலத்தெ மளகைநகர் வீரன்வந்தாற்
காமன் றன்னைத்
தீமணக்க விட்டுமணந் தெனைப்புரப்பான் றோழிசந்து
செல்வா யின்றே. (18)

## உமையம்மை.

செல்வாக்கும் மேன்மைச் சிறப்புந் திசைநாட்டிப்
புல்வாக்கு நாவிற் புகலாமற்—றொல்வாக்காம்
வேதநெறி யோம்புமா வேட்கைதா மாவளகைப்
போதநிறை வாமுமையுட் போந்து.

## வீரசேகரன்.

போந்திருக்குந் திருமாலும் புண்டரிகப் புத்தேளும் (19)
புலவர் கோவுந்
தாந்திருக்கிற் சரியாமன் முறையோதி மணிமுடிக
டாழ்ப்பத் தோய்ந்து
சேந்திருக்குந் திருவடியெம் முடிவைத்துப் பவநாசஞ்
செய்வா னன்பாய்ப்
பூந்திருக்கை மலர்தூவி யளகையம்மா னைப்பரவாய்
புந்தி பூத்தே. (20)

முற்றுப்பெற்றது





உ

சிவமயம்.

மகா கணபதே நம:

# அளகை வீரசேகரன் மும்மணி மாலை



## காப்பு.

அம்மணிமா தேவியுமை யர்த்த வளகேசன்
மும்மணிமா லைபுனைய முன்னிற்கு—மிம்மணிற்சீ
ரேந்தும் புலவர்க் கியல்விருந்தாந் தென்றமிழ்ச்சொற்
றேர்ந்துதவு மானைமுகத் தே.

## இதுவுமது.

பாலத் திருக்கழ லார்விழி யாதவன் பான்மதியஞ்
சூலத் திருக்கைய னெந்தரங் காத்தவன் றெல்லளகை
வேலத் திருக்க னுமைமண நாயகன் வீரைமர
மூலத் திருக்குமன் மும்மணி மாலை மொழிகுவனே.

## நேரிசை வெண்பா.

அளகைவளர் வீரேசா வப்பா சிறியேன்
பளகையறுத் தாட்கொள்வாய் பண்பா—வளகையேந்
தண்ணலிப மாமுகவ னையன்வீ ரன்வடுகன்
யெண்ணருபா தந்தையெந்தா யே (1)

## கட்டளைக்கலித்துறை.

ஏறூதி திண்ண னெழிற்குலமென் றுபாரை யிட்டவேடற்
கூறூதி காறூட றந்திலை மோக்க முறவளித்தாய்
வாறூதி யெட்டுரு வாய்ப்புகழ் பாடுவன் மாவளகை
தாறூதி யென்றுனை வந்தடைந் தேன்சுகந் தந்தருளே. (2)

## நேரிசை ஆசிரியப்பா.

அருடா மன்னி யபயங் காட்டி
யொருகை மேனிமிர்த் தொருகை தாழ்த்தி
ஈதற் குறிப்பீண் டியார்க்குந் தோன்றக்
காதலி னின்ற கடவு ளீயே
வயாவளர் சிசுக்கும் வழங்கி யாண்டுந்
தியாக னென்னச் சிறந்தனை யதனு
லொப்புற வமைந்த செப்புனக் கேயாம்
பொய்ப்படு முலகப் புதுமயல் போர்ப்ப
வெய்ப்பொடு திரியு மெம்ம னோர்க்கே
யறத்தா றோம்பி யடுத்தடுத் துன்பாற்
பெறத்தா மாதே பெறுதலி னைய
விரவல ரென்கை யியல்புடைத் தம்ம
வரன்முறை தேரின் வழக்கீ தாமால்
நாற்பா னிலத்தி னுயகன் பாற்போய்
யேற்பார் தாச ரிகழ்ச்சிய தன்றே
இத்தகு முறைதேர்ந் தேற்பதற் கஞ்சேன்
நத்தி வந்தன னலியுநல் குரவிற்
குத்தரம் பகர்ந்தின் றுதவுதல் கடன்காண்
அதுவு நின்ற னடியவர்க் கிட்டு
நொ துமல் போக்கி நோன்பிழைத் தற்கே
யெண்ணுதற் கரிய கண்ணுதற் பெரும
தண்ணளிக் குரியார் நின்னல தியாரே
யெள்ளிற் பிளவினு மிருத்தி யாலென்
னுள்ளப் புணர்ப்பு முணர்ந்தனை பொல்லா
வறுமை வாட்டி மற்றதற் கிடனுஞ்
சிறுமை தீர்த்துச் செம்மாந் தின்பத்
துறைபுகுந் தாடிச் சுகம்பெறத் தோலாச்
செல்வந் தருவாய் தேவ தேவ
பல்வந் தனைநான் பண்ணுவன் கருணை

பாலித் தளகைப் பதிதனில் விரை
மூலத் தமர்ந்த முதல்வா
தாவா வோகை தழைக்குமா செய்யே. (3)

## நேரிசை வெண்பா.

செய்யேந்து பைங்கழைகள் சிந்துமணி கானிலவிற்
பையேந்து மாம்பல் பகன்மலர்ந்து—மையேந்துஞ்
சீரா ரளகைச் சிவனார்தாள் சிந்தைசெய்
போரார் மறலிதுயர் போம். (4)

## கட்டளைக்கலித்துறை.

போமாலை யம்புலி வந்திறைக் கும்மழற் புந்திநொந்து
வேமாலை யின்சொல்லி மெய்பதைத் தாவி மெலியுமந்தோ
தாமாலை யாய்ச்சரம் பெய்காம னைத்தெறத் தாநிசென்று
நீமாலை வாங்குவில் வாரண்யன் பாற்றுயர் நீக்கவின்றே. (5)

## நேரிசை ஆசிரியப்பா.

நீக்க மின்றி நிலநீர் காற்றுத்
தீக்கடு வெளியிற் றிளைத்தும் வேறு
யளப்பறு கோடி யண்டஞ் சமைத்துத்
தளப்பமி ருவர சங்கமம் வகுத்தே
யாக்கல் காத்த லழித்தன் முத்தொழி
லாக்கி யெஞ்சா தருற்றனின் செயலே
போக்கும் வரவும் புணர்வற் றேனோர்
வாக்கு மனமும் வழுத்த நினைக்க
வொண்ணா தாகி யொளியாய் மன்னிப்
பீடுறு கமலப் பிரமனுந் துளவக்
காடுறு மார்பக் கரிய மாலுந்
தேடி நொந்தனர் திரிய வன்பருள்
காடி நின்று நட்டம் பயில்வோய்

பொற்பூங் கொன்றைப் புதுமலர் வேய்ந்த
வற்புத மூர்த்திநின் னாருள் வழியிற்
பூசனை புரிந்து பொன்னடி பரவுந்
தாசர் குழுவிற் சார்தற்கு நாயேன்
பாயொளி பரப்பும் பன்மணி கோத்த
மாலையிற் றென்சொன் மாலை யாக்கி
யுய்தி பெறற்கிங் குற்றனன் யானே
வைதவர் வசையும் மணிவா சகமு
மொப்ப நோக்குஞ் செப்ப முடையை
அப்ப னல்லா தன்னையு மாயினை
கோதறு குதலையிற் குற்றம் போக்கி
யாதரஞ் செய்துன் னருட்குறி மைத்தாய்ப்
பூதரம் வாவுந் தோளணிந் தைய
கண்ணுற் கடையேன் கண்டு களிப்ப
விண்ணு ரொளிகண் மேவ வோர்வரந்
தாதா வீரைத் தருவடி யிருந்த
போதா வளகைப் புனிதா
சாதன மேழைக்குத் தருகை கடனே. (6)

## நேரிசை வெண்பா.

கடல்பெருகி யூழியுறுங் காலத்து மாயா
தடல்பெருகி நிற்கு மளகைத்—தடமருவிச்
சேவித் திருமாறிச் சிந்தையழிந் தாள்கன்னி
யாவித்தி வீரருடற் காம். (7)

## கட்டளைக்கலித்துறை.

ஆமைக் குணத்துறப் பைந்து மடக்கி யருந்தவஞ்செய்
மாமைக் குறுமுனி காண்டகு கோல மணஞ்சிறியேன்
தீமைக் குலம்பொடி யாமா றளகைச் சிவாதருவாய்
நீமைக் குழலி யுமைமணக் கோலமென் னெஞ்சிடத்தே. (8)

## நேரிசை ஆசிரியப்பா.

நெஞ்சி னிற்பை நிமணம் புணர்ந்த
வஞ்சி மெல்லியல் வடிவந் தழைக்கு
மீருருப் புணர்ப்பி னெழுதாக் கிளவிச்
சிருறுக் குதலைச் செல்வன் செந்திக்
கந்தன் மூத்த கணபதி சேர்வர்
மற்றும் வெற்றி வடுகன் வீரன்
அற்றமி லைய னணைகுவர் நின்றுருக்
கணங்கள் கோடி கழுதுகள் கோடி
இணங்குவ ரண்ட ரெண்ணில் கோடி
பரம்புவ ரிருசுடர் படைப்போன் காப்போன்
நிரம்புவர் கோனு னிலவுவ ரிசைபுகல்
நாரதன் றும்புரு நற்றவர் நெருங்குவர்
பற்று நீரப் பாழ்மனத் தந்தோ
வூன மலைஞ்சி யொழுகி யொல்கா
தின மலிந்தா ரிருண்மய மாகி
தெருளற்று மையல் செறிந்து குறுகிப்
பழவினை யென்பதோர் பாதவ முளைத்து
கழிபட ராசைக் கவடுகள் போக்கி
இலைமலர் காய்கனி யிரத மாகப்
பாதக மைந்தும் படர்தலின் மிடைந்த
வடவியொப் பாமா லமர்தற் கிடம்பெறல்
யேலா தாயினு மெந்தாய் நின்கட்
கடைவழி கருணை கலக்கு மோர்புன்
மசகம் கருடனுய் வயங்கு மன்றே.

ஆதலிற்

புன்மை போக்கிப் புனிதஞ் செய்து
நன்மை யாக நலம்பல புணர்த்தி
போதம் பொலிய வாதாஞ் செய்தே
மேதகு நீவிர் விளங்குதற் களவாம்

படியிடஞ் சமைத்துப் பசுபதி கடையேன்
மனம்புகுந் திருக்க வரமொன்று வேண்டு
மில்லா திரக்கு மெளியேற் கீதல்
அல்லா துண்டோ வறம்பிறி தொப்பில்
வில்வா ரணிய வீஇஇர சேகரா
நல்வாக் கொன்று நவிலுதி
செல்வா யெல்லாஞ் சிறப்புற வினிதே (9)

## நேரிசை வெண்பா.

இனிமைக் குலம்வந் திறைக்குமம்பைப் பேதை
தனிமைக் குலர்ந்தந்தோ சாம்புந்—துனிமைத்த
காரியுண்டாற் கோதிவில்வக் கான்வலவா தேரூர்ந்து
மாரிவரா முன்னழைத்து வா. (10)

## கட்டளைக்கலித்துறை.

வாதவூ ரத்தர் மணிவா சகத்தமிழ் வார்க்குசெவிச்
சாதவூ றற்றயர் நாய்குரைப் பேந்துந் தகைமையதோ
போதவூ முற்றவர்க் கெட்டா வளகைப் புராதனநற்
சீதவூ கத்தளங் கொன்றையிற் சூடுஞ் செழுஞ்சுடரே. (11)

## நேரிசை ஆசிரியப்பா.

சுடர்மணி வாரித் தூய்த்திரை கொழிக்குங்
கடலுடை யுடுத்த காசினி தன்னில்
அன்ன மேந்தி யடுத்தடுத் திரங்கி
வன்னஞ் சார்ந்த மலகரி பாடும்
புள்ளின முண்ணாக் கள்ளமு தூட்டிப்
பிள்ளைப் பிறைநுதற் பேதைய ரோகையுற்
திருவினைப் பகைக்கோ ரருமருந் தாகிப்
பொருவருந் தொண்டர் புகுவழி நாடிப்
புதுவமு தருத்தப் பதுமக் கரமமைத்
தழைப்பன போனின் றசைந்தசைந் தார்வந்

தழைப்பச் செங்கேழ்த் தாமரை படரு்
தடம்பல மல்கி யிடம்பெறு மளகை
விடம்பயி லரவணி வீஇர சேகரா
மிடைகதிர் நேமிப் படைபெறப் பூந்தண்
மடலவிழ் நளின மலரா யிரம்பெய்
தருச்சித் துன்னரு ளானை வயத்தாய்
திருச்சிற் புணர்பால் செங்கண் சாத்திய
தண்டை யொலிசெய் திண்டை புனைந்து
தொண்டருண் மேவித் தொடர்பவக் கடற்கோர்
தெப்ப மாகி யொப்பறு முத்திக்
கரையிற் சேர்க்குங் கான்மலர் வணங்குவன்
நின்னரும் புகழைப் பன்னரி தாயினும்
மன்னவ சிறியேன் மனனின் றாக்கும்
ஆசைத் தொடர்பா லாக்கினன் றென்சொன்
மாலை மும்மணி வகுத்தவிப் பாக்கொண்
டுய்தி காட்டி யுடற்பிணி கட்பிணி
போக்கி யின்பம் புணர்த்தி நாளுந்
தாயிற் பரிவு தழைத்துச்
சேயித் தரையிற் செழிக்குமா செய்யே. (12)

## நேரிசை வெண்பா.

செய்தவத்தா ருட்பகையைச் சேதித்தார் பான்மருவிப்
பொய் தவத்தான் வேண்டுவையேற் புன்னெஞ்சே-கைதவத்தாழ்
பூவாசை மாதர்ப் புணர்ப்புவிட மாவளகை
வாவாசை சிற்பரன்றாள் வைத்து. (13)

## கட்டளைக் கலித்துறை

வைத்துத் திருவடி முச்சியி லேழ்பவ மாய்க்கறியா
தெய்த்துச் சுழல்கடை யேனையு மாட்கொள்வ தென்றுகொலோ
பைத்துச் சினவர வஞ்சு டளகை பயிலிறைவா
கைத்துத் துயர்தரு கண்ணோய் பொடித்தருள் கண்மணியே.
(14)

## நேரிசை ஆசிரியப்பா.

கண்பயி ேறுகைக் கார்மயிற் சாயற்
பெண்படர் மேனிப் பெருந்தகை யண்ணுற்
பன்னருங் காலம் பழமறை தேடித்
தன்னரும் கான வொண்ணு தோங்கி
யடன்மிகுத் தெழுந்து சுடர்விடு சோதித்
திருவுருக் காணும் பெருவலி யுடையார்
வுத்தமத் துறையிற் சித்தம் பயின்று
பத்திமை பெருக்குஞ் சுத்தஞா னியரே
அன்னோர்
காதங் கவிழ்க்கும் போதென விரிந்து
சீதம் புணர்ந்த சிந்தையிற் பயில்கைக்
காரா மோகந் தாழா வாரிய
கற்றல் கேட்ட லுற்றவை யுணர்தல்
சற்றறி வில்லாப் பித்தனுன் மத்தன்
மாண்ட மனத்தார் காண்டகு நெறியிற்
பாண்டரு வேதப் பாதுகை பொறுத்த
பொற்கழ லொலிக்குஞ் சிற்பதங் கண்டு
கன்மன முருகிக் கைகுவித் திறைஞ்சிப்
பன்னருந் தமிழாற் பழிச்சிடப் பெற்றனன்
ஆதலிற்
திரைமலி முந்நீர்த் தரையிடத் தெந்தாய்
புரைதபு மெய்த்தவம் புரிந்தனன் யானே
மழவிடை யெருத்திற் றழைவுறு சுந்தரா
பழவினைப் பந்தங் கழல நாயேற்குப்
பொன்னெடுங் குடுமிப் புரிசை வான்றேய்
நன்னக ரளகை நாடும்
மன்னவ சட்கடை வழியருள் புரியே. (15)

## நேரிசை வெண்பா

புரிவார்க்கு மல்லார்க்கும் புத்தமுத மீய்ந்தே
யரிவார்த்து வாழ்வாக்கு மையன்—சரிவாய்த்த
தேமலர்க்கை மாதுமைசேர் சித்தனள கைப்பரன்றூண்
மர்மலர்க்கை தூவி வலம். (16)

## கட்டளைக் கலித்துறை.

வலங்கொண்டு சேவித்து வீழ்ந்தா னிலத்தின் மாபிதென்றே
நலங்கொண்டு பூரித்த பேதையென் றேகை நலிவுகண்டேன்
கலங்கொண்ட காபாலி நீசெய்த சூதிற் கருத்தழிந்தாள்
வலங்கொண்டு மாறுய்ய வேட்பா யளகை மணிநகர்க்கே (17)

## நேரிசை ஆசிரியப்பா.

மணிநக ருருவப் பணிமுடி மிதித்துக்
குணில்பொரு முரசி னதிர வொலிசெய்
காளிந்தி நாப்பட் டோளுந்தி யாடிய
பாற்கடற் பள்ளிப் பச்சை மாலும்
அஞ்சப் பிடர்வரு கஞ்சக் கிழவனும்
மாறு முட்பகை போர நிகலித்
தருக்கி யூழியிற் சமர்விளைத் தமர்த்துப்
பொருக்கெழுச் சலதி புகைந்தெழு மக்கால்
அந்தர மதிர வந்தெழு மாற்றங்
கேளா விசைந்தனர் தாழா முயன்று
வசுந்தரை யகழ்ந்தும் வான்மிசைப் பறந்தும்
ஏன மாகி யெகின மாகி
அடிமுடி யறியா தயர்ந்தல மந்தே
யெய்த்தனர் நிற்ப வெரியெழுஞ் சோதிப்
பேருரு வொளித்த பெருமா னின்றன்
பங்கயம் பழித்த பாத மிறைஞ்சுதும்
ஆருயிர் மீனஞ் சார்வரி தாகிப்
பவக்கடற் பாய்ந்து தவப்பல முயன்று
தாவிப் பன்முறை தவறுபட் டொழிதலிற்
கருக்குழி வீழ்ந்து நெருக்குற் றம்ம
மருக்கங் கொண்டு மலத்திடை யூறி
வெந்துயர்ப் பட்டுச் சிந்தை யழிந்து
வெய்துயிர்த் திரங்கி வெம்புமப் போழ்து
வருத்தி யுறுத்து மருத்தி னைவர்

ஒளிவின்று முச்சி யுந்தினர் சுருங்கை
வழிநைந்து நொந்து மண்டரை வீழ்ந்தன
பசிப்பிணி வாட்டிப் பதைப்புற் றுடற்பிணி
நசிப்ப விடைந்து நலிந்துமற் றோர்துணை
வேண்டித் திசைதொறுந் தேண்டிப் புன்மனந்
திரிகால் விரிதலைக் கொடுவினை யாளன்
இருங்கா லிற்சுழற் கருங்காற் கூற்றன்
கையகப் படுத்தற் கைய தூண்டிலிற்
பாச மெறிந்தன னசையொ டுழன்று
திரிந்தன னினியென் செய்குவ னெந்தாய்
யிருவிழி யொழுகி வழிதரு நீத்த
வருட்கடற் குதித்துத் திருக்கழற் புணையைப்
பற்றி யுய்மா பெற்றி வேண்டினன்
அவந்துடைத் தாட்கொண் டருடவா தருளிச்
சிவந்தர நின்போற் றெய்வ மற் றிலையால்
மண்மகி ழளகை வாதா
உண்மகி ழோங்க வுதவுதல் கடனே. (18)

## நேரிசை வெண்பா.

கடன்பட்டார் நெஞ்சழிதல் கம்பன்வாழ் காலத்
திடம்பெற்ற தாமளகை யீசா—கடன்பலபட்
டக்காரம் போல்விழுங்கி யப்பன்மா ரேப்பமிடுஞ்
சொக்காரிக் காலமுண்டோ சொல். (19)

## கட்டளைக் கலித்துறை..

சொல்லுந் திறனறிந் தின்றமிழ் வார்த்துத் தொடைபுனைந்து
புல்லுந் தராக்கடை லோபர்தம் வாயிற் புகுந்திளைப்பீர்
செல்லுந் திசைக்குத் தருமள கேசன் சிறப்புரைத்து
நில்லுந் தினமதி லென்னே வுமக்கு நிலையறமே. (20)

## நேரிசை ஆசிரியப்பா.

அறநெறிச் சாரத் திறன்வலி யுறுத்துத்
துறைநிலைப் படுத்த தொன்மறை யாய்ந்
தழுக்கா றற்றுள் ளிழுக்கா தொழுக்கங்

கைவரக் கொண்ட சைவ வேதிய
ருள்ளத் துறவுடை யொருவ னின்னை
பள்ளக் கமலம் பரித் தயராதே
அன்பு விரவி யாட்டி யருச்சித்
தென்புதோல் யாத்த புன்புலால் யாக்கைக்
குற்றிடு பயன்கொள் பெற்றியன் றுவாச்
சிறுமைத் தாக்கும் வறுமைப் பட்டுத்
தாயொடு தந்தை சேய்மனை யாட்டி
ஆயபல் சுற்றத் தார்பெறும் பசையாம்
பொல்லாப் பிணியிது போக்குமா றெந்தாய்
நல்லா தாவி னல்குதி யென்னக்
குறையிரந் தேற்பக் குடிலைத் தென்டிரைத்
துறைமணற் கமழுஞ் சோறெனத் தந்த
சித்த வெளியேன் பித்தக் திலைப்
பன்னெடு நான்மறைப் பாதுகை மிதித்து
மன்னிய செந்தா மரைப்பதம் வழுத்தினன்
பத்தி பழுத்த வுத்தமத் தொண்டரை
யித்தரை யிட்டுன் டிறைஞ்சுதற் கவாவினன்

ஆதலிற்

சோறுங் கூறையு மாறின்றி நல்குதி
யாறுந் தாரு மணிசடை யாசே
வித்தகர் முத்தமிழ் விரகர் பழிச்சும்
புத்தமு தப்பா வொத்தசொன் மாந்து
நின்னருஞ் செவியிற் றன்னமு மேற்காப்
புன்மைத் தாயினு மன்னத்திற் கடையேன்
குற்றம் போக்கிக் குணங்கொண்டு
மற்றவை யளகை யுத்தம வுதவே. (21)

## நேரிசை வெண்பா.

உதவித் துணைநின் றுயிர்காப்பர் மேலோர்
சதவிற் றுயாந் தருங்கீழ்—மதவித்தாஞ்
சிற்றம் பலவளகைத் தேவாகீழ் நட்பொறுத்துப்
பற்றம்ப லற்றிருக்கப் பார். (22)

## கட்டளைக் கலித்துறை.

பாரிடங் கோடிவன் பேய்க்கணங் கோடி பரவவந்து
தேரிடங் கொண்டு மலைமாதை வேட்ட சிவக்கொழுந்தே
யாரிடஞ் சொல்லுவ னென்குறை நீமுத லாகுமாத்
தூரிடங் கொள்ளள கேசா விரைந்து சுகமருளே. (23)

## நேரிசை ஆசிரியப்பா.

சுகமரு ளின்சொற் பகர்தரு மணிவாய்த்
திகழ்மதி முகத்துச் சிற்றிடை மகளிர்
எஞ்சா வலியுடை யஞ்சா மனத்துக்
கடுநடை பயின்று மிடைதர வலைகாது
சுரந்தெழு வஞ்சங் கரந்துள் வைத்த
வன்கொலைப் பதகப் புன்றொழின் மறவர்
கச்சியி னிறைந்த பச்சிலைப் பொதும்பர்
மரக்கிளை தோறுஞ் சுருக்கெழு கண்ணி
யமைத்துப் பறவை தமைப்பிடித் தாங்கு
வாளொடு பழகிக் கோளர் வுமிழும்
நஞ்சம் புதைத்துயிர் கஞ்சம் புகினுந்
தன்னமு மிரங்கா தின்னல்செய் துழக்கும்
வரிவிழிக் கண்ணிப் பொறிபடுத் தந்தோ
அயரா திளைத்துப் பெயரா தெழுந்த
மையன் மீக்கொண் டைதவர்க் காளாய்ச்
சொற்றிறம் பயிலாச் சிற்றினக் கடையேன்
அகப்பொருள் காணு தவருடற் கிளைத்து
மார்பிடங் கொண்டெழுந் தோர்பெறத் திரண்டு
பொற்கந் துகநேர் பொம்மன் முலையைச்
சொர்க்க மீதோர் நற்கந் தந்தரும்
இம்மைக் காய மெய்மைச் சுகமெனப்
பன்னெடுங் கால முண்ணெகிழ்ந் தணைத்துப்
பசையறு மென்பை நசைகொடு கவ்வி
வலித்திழுத் திரத்தம் வழிதர்க் கடைவாய்
நக்கியுள் ளுவக்கும் ஞமலிபொத் தெந்தாய்
பீற்றற் றுருத்தி நாற்றப் பாழ்ங்குழி
என்புதோல் யாக்கைக் கன்புதோய்ந் தலமந்து

பொய்யறி யாதழல் கைதவன் றருகட்
புகர்முக மென்னப் புலன்செல் பித்தன்
மேன்மைத் தவம்பெறு மேனையோர்க் கல்லதை
யானைக் காவி லருள்சுரந் தொருத்தற்
காத்தனை நீயே கடவு ளாமால்
அஞ்சினன் கண்டா யபய நிற்கே
பஞ்சிமெல் லடியுமை வஞ்சி பாகா
எந்தர நாய்க்குத் தவிசிட் டாலெனச்
சுந்தர வளகைத் தோன்றல்
பழிப்புறு புன்மை யொழித்தின்ப நல்கே. (24)

## நேரிசை வெண்பா.

நல்குந் திருக்கொன்றை நாகநெடுந் தோண்மருவிப்
புல்குந் திருமகிழ்ச்சி பூத்தினிதே—மல்குகடப்
புத்தூ ரளகை புரக்குமர சேமுன்கை
நத்தூ ரரிவிழிக்கி னாள். (25)

## கட்டளைக் கலித்துறை.

நாளொற்றி யொற்றி விரறேய்ந்த செல்வழி நாடிவிழி
வாளற்ற தேமொழி வாய்புலர்ந் தாண்மதி வந்திழைக்குங்
கோளற்ற மோர்ந்தினி யங்கசன் கோல்விடுங் கோதுறமெய்
தோளொற்றி யாடிய வில்வா ரணியற்குச் சொல்லனமே. (26)

## நேரிசை ஆசிரியப்பா.

அன்னந் தேடி யகல்விசும் பளந்து
பன்னெடுங் காலம் பறந்துங் காண
வரிதாய் நிமிர்ந்த புரிசடைக் கடவுள்
விழுப்பஞ் சார்நின் மென்செவிக் கேழைப்
புழுத்தலை நாயேன் புகறுவ தொன்று
பாய்திரைப் பரவை தோய்நிலப் பரப்பி
லிருவகைத் தாய வீரிரு தோற்றத்து
வருபிறப் பேழும் வாய்த்துருப் புணர்ந்து
நாலிரு பத்து நான்கு யோனியிற்

புக்குச் சனித்துப் புன்னுனிப் பனிபோற்
றெருக்குவிட் டம்ம தொடர்வது வழக்காய்
நெடுநாட் பழகி யடன்மிகுத் தளப்பருங்
கூத்தயர்ந் தெய்த்தன ளுற்று தாசே
பவக்கடல் கடத்திச் சிவப்பேறு தருமா
றுன்னருள் வேண்டி யுரகப் பாய்துயில்
மாதவற் கெட்டாப் பாத பங்கயம்
போற்றினன் சரணம் புகுந்தன னழுதழு
தேத்தினன் வாளா விருந்தனை நீயே
அறந்தழை வடிவத் தருட்குணத் தொருவன்
என்னினும் பிறத்த லிறத்த லறியாய்
கருவிடைப் பட்டுக் கலங்கி மூர்ச்சனை
பெருகிக் குறுவழி வருவதற் கியலா
தேங்கி மாழ்கி யிடற்பட் டுதைபட்டு
பொத்தென வீழ்ந்து மெத்த மயல்கொள்
பித்தனை யல்லது பிரமன் மாலொடு
வித்தகம் பயின்ற வெத்திறத் தேவரும்
பிறப்புறு பீழை யறத்தெரிந் தன்றி
இறப்பிற் படுதுய ரிதிலெண் மடங்கெனத்
தோலா தறிகுவர் சூலா யுதநீ
யறிந்திலை யதனாற் புரிந்திலை போலும்
தாயே சேய்க்குத் தகுதுணை யாமால்
மாயாப் பிறப்பை மாய்த்தினி துன்றுள்
வாழ்வர மெற்கு வழங்குதி யளகை
மூவா முதலே முன்னின்று
தாவா வோகை தழைக்குமா றின்றே. (27)

## நேரிசை வெண்பா.

இன்றைக்கே வில்வவனத் தீச்சுரனார் தாள்பணிமின்
என்றைக்கோ கூற்ற னிடர்செயுநாட்—கொன்றைத்தார்க்
கோமானை வேட்டகத்திற் கோடித்து மாதரையீர்
வாமானைச் சேர்த்துவலம் வந்து. (28)

## கட்டளைக்கலித்துறை.

வந்தூர்ந்து சோலையிற் றேன்வாரி நாளு மறுகிறைப்ப
நந்தூர்ந்த கைமட வாரிடுங் கோல நறுங்குழம்பின்
சந்தூர்ந்து நாற்றிசை யுங்கமழ் சாக்கைத் தனிமுதலா
ரிந்தூர்ந்த வார்சடை யம்மானைச் சிந்தித் திருமனமே. (29)

## நேரிசை ஆசிரியப்பா.

மனத்துற வடைந்து சினப்பகை கடிந்த
மாபெருஞ் செல்வத் தாபதர்க் காளாய்
வேட்டவை நல்கும் விருப்புடை யெந்தாய்
போதம் புணர்த்தி வாதவூ ரண்ணற்குப்
பெருகிய வன்பிற் பிணைபட் டொருநாள்
வைகைத் துறையின் மண்முடி சுமந்து
தென்னவ னுய மன்னவன் கைக்கோல்
அடியுந் தாங்கி யருந்தவச் செல்வி
பிட்டினை நுகர்ந்து வட்டாட் டயர்ந்துங்
ஆக்கிசைத் தன்பு மீக்கொளு பத்திரன்
முதலாந் தொண்டர்க் ககலா தேவற்
புரிந்து புரிந்து பரிந்தருள் சுரந்து
மறுமைப் பேறும் வழங்கினை நின்னை
யொப்பதோர் தெய்வஞ் செப்புதற் கில்லை
யண்டர்க ளுய்யத் தெண்டிரை நஞ்சங்
கண்டத் தமைத்த வெண்டோட் சுந்தரா
யேழையெம் போல்வார்க் கெளியவ னவை
யண்ட மாவை யனுவு மாவை
பண்ட மாவை பலவும் புணர்வை
யைந்தொழி னின்ற னுணை வயத்தாய்த்
தந்தனை மூவுருச் சமைத் தியமானன்
ஆதவன் றிங்கள் பூத மைந்தோ
டெட்டுரு வாகிய மட்டில் சோதிச்
சுடரே தெண்ணீர்க் கடலிற் றாம்பின்

நீருங் கலக்கு நீர்மைத் தாகி
யுயர்வுந் தாழ்வு மொப்பக் காணுந்
தயாபர வெளியேன் ருழ்வு கருதாது
வித்தகர்க் களித்த முத்திவீட் டிருப்பக்
கடையேன் விரும்பினன் றடையற மடைபாய்
நீத்தம் போனு மூற்றெழு கருணை
யெட்கடை பாலித் திரங்குதி யன்னப்
புட்குலம் பயிலுந் தட்பத் தாமரை
வாவியிற் றிருமகண் மன்னி
யாவியிற் பொலியு மளகை யமுதே. (30)

முற்றுப் பெற்றது.





உ

சிவமயம்.

மகாகணபதே நம:

# அளகை முதல்வன் முறையீடு.



## காப்பு.

### கட்டளைக் கலித்துறை.

தேவா கருணை மழைசிந்து மாமுக சிந்தை வைத்தேன்
பூவா ரடியிணை பாகொத்த தென்சொற் புணர்த்தவருள்
பாவாண ராய்ந்து சுவைகொள்ளு மாறொரு பாவளகை
மூவா முதல்வன் முறையீடு யாப்பின் மொழிவதற்கே.

## நூல்.

### அறுசீர் விருத்தம்.

மாமலர்த்தேன் விருந்தமரர்க் கூட்டுறுசீர்ப் பொழிலளகை
வாழ்வீ ரேசா
தேமலர்ச்செஞ் சடைவிரித்து மெய்யடியா ருண்ணடிப்போய்
தெளிவி ஞயேன்
நாமலர்த்துந் தமிழுமுகந் தருளமுதஞ் சிறிதுதவி
நாரி யோடுந்
தாமலர்க்கண் விடையிலெழுந் தருள்கடைநாட் பறைபடுமத்
தருணந் தேர்ந்தே. (1)

## எண்சீர்விருத்தம்.

வனசரன்கைப் பட்டுயிர் தேய்ந்திரங்கும் புட்போன்
மறலிகொடும் பாசத்தால் வருந்து முமற்
கனசாமர்ச் சுனர்க்களித்த முதல்வா விரைக்
கற்பகமே யற்புதமே கருணை செய்துன்
வனசமலர்த் தான்காட்டி வதனங் காட்டி
வரதபய கரங்காட்டி மலைமா னேடுஞ்
சனசமுகத் தார்பழமை பேசி யிமத்
தழலிடுநாட் டருமனை தனில்வந் தாளே. (2)

## அறுசீர்விருத்தம்.

முத்தாருந் திருநகையாண் முலைச்சுவடு பட்டுருகு
முதல்வா சேயாய்ப்
பத்தாரு மதிகெடந்து பரிதபித்தேன் ருய்வயிற்றுட்
படியில் வந்து
பித்தாகி யுனைவழுத்தும் பெற்றியறி யாதயர்ந்தேன்
பெரியோய் விரைக்
கத்தாயென் செய்வனுயிர் போம்பொழுதுன் றிருநாமங்
கழறச் செய்யே. (3)

## எண்சீர் விருத்தம்.

சிந்தனைக்கெட் டாதபரம் பொருளே விரைச்
சின்மயமே பொற்சிலம்பார் திருத்தாள் போற்றி
வந்தனைசெய் தன்புருவாய்க் கண்ணீர் வார்த்து
மலர்பெய்தா யிரநாமம் வாயாற் கூறி
உந்தனையா னருச்சித்த பின்ன ரிந்த
உடல்விட வொருவேட்கை யுற்றே னையேன்
தந்தைய விடையானோ ருமையாள் பாகா
தந்தைதா யாயுலகிற் சரிக்குந் தேவே. (4)

## அறுசீர் விருத்தம்.

தாவுமிள மானிடத்திற் றரித்துவல மழுவேந்துஞ்
சதுரா பூவிற்
றேவுமணி நெடுமாலுந் தேடரிதா யொளியாகித்
திகழ்ந்தா யென்பாற்
சாவுவரும் பொழுதுசிவ சாதனங்க ளணிந்திருகை
தலைமேற் கூப்பி
நாவுலரா தைந்தெழுத்து நவிலுமா றருளளகை
நகரம் மானே. (5)

## எண்சீர் விருத்தம்.

பொற்சிலையோர் வில்லாக்கிப் புரங்கண் மூன்றும்
புன்னகையா லெரிமடுத்த புனிதா வன்பாய்ப்
பச்சிலையுங் குடங்கையி னீருந் தூவிப்
பரவிவழி பாடுசெய்யாப் பதக னேனும்
அச்சினைவிட் டுயிர்பிரியு மந்த நாளி
லந்தகனுர்க் காளாகி யயர்வெய் தாமல்
நச்சினையூ ணாக்கியவி ரேசா நின்றாள்
நான்பூசித் திறக்கவரு ணல்கா யின்றே. (6)

## அறுசீர் விருத்தம்.

பொற்பாவை யாய்க்கரிந்த வெள்ளென்புக் குயிரளித்த
புகலி வேந்தன்
நற்பாவை யுகந்துபடிக் காசுதந்த வில்வவன
நாதா நின்னை
யற்பாகத் தொழும்பரிசொன் றறியாதேன் சரண்புகுந்தே
னாட்கொண் டந்தங்
கற்பாரை மனதுருகித் துதிபாடித் தொழுதிறக்கக்
கருணை செய்யே. (7)

### எண்சீர் விருத்தம்.

உண்ணாத முலைமடந்தை யண்டமெல்லா
முதவியசீர்த் தாயமலை யுமையாங் கன்னிப்
பெண்ணுவா னொடுவிடையூர்ந் தென்முன் வாராய்
பித்தாகி யுழல்கின்றேன் பெருமா னந்தங்
கண்ணுறுன் றிருவுருவங் கண்டு மாயக்
கடங்கவிழ்க்கும் பேராசைக் களியன் கண்டாய்
தண்ணாரும் பொழில்புடைசூ ழளகை மேய
சங்கரா கங்கைமதிச் சடையம் மானே. (8)

### அறுசீர் விருத்தம்.

வெண்ணி றணிந்தைந் தெழுத்தோசை
மெலியா தோதிக் கைகுவித்துக்
கண்ணி ரொழுக்கி யயல்கழுவிக்
கரைந்துள் ளெகிழ்ந்து விடையினனை
யெண்ணிர் மையினுன் கண்டுதொழு
திறக்கும் படியோர் வரந்தருவாய்
தெண்ணிர் வயல்சூ ழளகைநகர்ச்
செல்வா தேவர் சிகாமணியே. (9)

### எண்சீர் விருத்தம்.

தேவாரம் புனைந்தார்க்கும் மணிச்சொல் யாத்த
திருவாத வூர்முனிக்கு மாட்பட் டாண்டாய்
ஓவாத பேரன்பிற் கருத்தொன் றாகி
யுருத்திரசா தனந்தரித்துப் பூசை முற்றித்
தேவாநின் பெயருரைத்து மாயா வின்பத்
தேக்கியுடல் விடவருள் செய்வாய் செஞ்சொற்
பாவாணர் துதியேத்தி யொருமை வீடு
பாலிப்பா யளகைவளம் பதியாள் வோயே. (10)

## அறுசீர் விருத்தம்.

பண்ணிறைந்த மறைமுடியி னட்டமிடும் பரசிவமே
பைந்தாட் கஞ்சக்
கண்ணிறைந்து மடையுடைக்குங் கயல்வாவி வில்வவனக்
கடவு ளாயேன்
எண்ணிறைந்த பூதியணிந் தறிவுமயங் காதிசையோ
டெழுத்தைந் தோதி
யுண்ணிறைந்த பேரன்பி னுன்னுருவந் தொழுதிறக்க
வொருப் பாடீயே. (11)

## எண்சீர் விருத்தம்.

பொற்றுள மணிப்பந்தர் சின்னந் தந்தாய்
பூந்தாய் வேந்தற்குச் சொல் வேந்தற்குக்
கற்றூணுந் தோணியென மிதப்பச் செய்தாய்
கருத்திசைந்து சுந்தரர்க்குப் பரவை யார்பாற்
பற்றாகித் தூதுசென்று யவர்சொற் றேர்ந்து
பளகறுத்தென் றமிழுகந்து பரிசு தாராய்
நற்றுயிற் பரிந்தளகை யம்மா னுன்னை
நான்கண்டு தொழுதிறக்கு நலம தொன்றே. (12)

## அறுசீர் விருத்தம்.

மழுவலத்திற் றரித்தொருகை மான்பரித்துத் தில்லைமணி
மன்றி லாடுங்
கழுமலத்துக் கவுணியர்க்கு முலைசுரந்து பால்கொடுத்த
கவுரி நாதா
முழுவலத்தன் றுட்பாவி நீறணிந்தைந் தெழுத்தோதி
முடிமேற் கையாற்
றொழுவாத்தைத் தாவடியேற் குடல்விடும்போ தளகைநகர்ச்
சோதி யின்றே. (13)

## எண்சீர் விருத்தம்.

பங்கயக்கட் டிருமாலு நளினக் கோவும்
பாசகத் தாலுமென் பத்து நான்கா
யிங்கயற்க ணெழு வகைத்தா முயிர்க ளோம்பி
யியல்பாமுத் தொழிலாற்ற விறைமை தந்தாய்
அங்கயற்கண் மணவாளா வளகை யம்மா
னடியேனுக் கொருவரநீ யளித்தல் வேண்டும்
வெங்கயக்கட் டாமரைநே ருன்றாள் போற்றி
மேவியருச் சித்திறக்க வேண்டு மொன்றே. (14)

## அறுசீர் விருத்தம்.

காந்தாரம் வண்டிசைத்துக் காவிற்றன் மலருழுது
கவிழ்க்குந் தேனை
யேந்தாரந் தருசங்கந் துயில்கஞ்சத் தடம்பலசூழ்ந்
தெழிலார் சாக்கை
வேந்தாரந் தொய்யின்முலை மின்னிடையோர் பாகாயான்
வீடு மன்னாட்
காந்தாரம் பணிபூண்டு பொடியணிந்து நமசிவயங்
கழறச் செய்யே. (15)

## எண்சீர் விருத்தம்.

தன்மாமன் றலைகொய்து வேதத் தாயுந்
தழல்வேள்வி தடுத்தடுத்தார் தங்கட் கெல்லாங்
கன்மாவி னெறிப்படியோர் தண்டஞ் செய்து
கருணையினாற் றாய்மைசெய்த கடவு ளோயே
பொன்மாத ரகிலநசைச் சுழிப்பட் டெய்த்தேன்
புரத்தைக்கை விடுங்கடைநாள் போர்வெள் ளேற்றி
லென்மாசு கழித்தருள வருவாய் வீரை
யிறைவாபற் றென்றறியா வெளிய னேற்கே. (16)

### அறுசீர் விருத்தம்.

சிற்றம் பலத்திற் றேவர்காஞ்
சிரமேற் கூப்பி யடிவணங்க
வுற்றம் பலற்றங் கனவரத
மொருகா றாக்கி நடமிடுவோய்
சுற்றம் பலவா யாற்றவுயிர்
துறக்குங் கடைநா ளுணைப்பாவ
வெற்றம் பலத்தி னட்கழித்தேன்
விழைந்தே னளகை விழுப்பொருளே. (17)

### எண்சீர் விருத்தம்.

அரங்கத்தா னத்தனயன் றேடிக் காணு
வரும்பொருளே பெருஞ்சோதி யானு யெம்பா
லிரங்கத்தா னெவருளரோ விமையப் பாவை
யிடத்தாளும் வில்வவனத் தீசா நீண்ட
தாங்கத்தா றெழுபிறப்பும் பிறந்து நொந்தேன்
சரண்புகுந்தே னுயிர்துறக்குந் தருண நீயே
சிரங்கத்தா வெனத்தெளிந்தாட் பட்டேன் கண்டு
தெரிசிக்க விடையில்வந்தாள் தேவ தேவே. (18)

### அறுசீர் விருத்தம்.

வாதவூ ரடிகள் பாடல்
வரைந்தருட் டிறத்தான் மண்ணோர்
சாதவூ முறுக்கத் தந்தாய்
சரணம் யாஞ்சரண் வீ ரேசா
நாதவூன் செறிந்த யாக்கை
நான்விடுங் காலத் துன்சீ
ரோதவூ ரானிற் றேன்றி
யுமையிடந் திகழ வாவே. (19)

## எண்சீர் விருத்தம்.

துள்ளுமறி பரித்தவிடக் கரத்தாய் விரைச்
சுடரொளியே யெழுதாச்சொற் சுருதி நான்கும்
புள்ளுமணிக் கருமாவுந் தேடிக் காணாப்
பொருளேநற் கவியாத்த புலவா நாயேன்
விள்ளுதமிழ்ப் பாவுகந்து பரிசு நல்க
வேண்டுமுன தடிமையுடல் வீடு மன்னாள்
உள்ளுதொறுங் களிதூங்கு முன்றாள் காட்டி
யுருக்காட்டித் தொழப்பணிப்ப தொன்றம் மானே. (20)

## அறுசீர் விருத்தம்

புலிக்கான் முனியும் பதஞ்சலியும்
புகழ்ந்து மருங்கிற் றொழுதுநிற்பச்
சலிக்கா தொருகா றூக்கிநடங்
தருவாய் சாண்டந் தந்தகனார்
வலிக்கா தந்தத் தெதிர்தோன்றி
வந்துன் வழிபா டியற்றவருள்
பலிக்கா தாஞ்செய் தோடொருகை
பரித்தா யளகைப் பரஞ்சுடரே. (21)

## எண்சீர் விருத்தம்

பொழுதாகி மதியாகிப் பூத மைந்தாய்ப்
புருடனாய்த் திகழ்ந்தொளிர்சிற் பொருளே பூமே
லெழுதாதை தந்தவுடற் சும்மை நீக்கி
பிறந்தியுறுங் காலத்திற் றரிசித் தன்பாய்த்
தொழுதாடல் விடையிலெதிர் கண்டா நந்தந்
துய்த்தகிலந் துறக்கவர மொன்று வேண்டும்
விழுதாருஞ் செஞ்சடையா யளகை மேய
வித்தகவற் புதகருணை விரவச் செய்யே. (22)

## அறுசீர் விருத்தம்.

தோற்பாவை யெனவாடிக் கயிறற்று வீழ்ந்ததெனத்
தொக்கு மாயுங்
காற்பாகை நிகர்மொழியா ளுடனுகி வெள்ளேற்றிற்
கடைநாள் வாராய்
யாப்பாயுந் தமிழ்ப்புலவா வீரேசா நினக்கடிமை
யான்கண் டாயாற்
றீப்பாயுங் கட்கொடிய மறலிவலி மாய்ப்பதறஞ்
சிந்தை யோர்ந்தே. (23)

## எண்சீர் விருத்தம்.

சந்தநறுங் குழம்பணிந்து கமழ்ந்து முல்லைத்
தார்வேய்ந்த தடமுலையா ளொருபான் மன்னச்
சிந்தனைக்கெட் டாதபரம் பரனே வீரைச்
சின்மயமே விடையிலுனைத் தெரிசித் தன்பாய்
வந்தனைசெய் தைந்தெழுத்தும் வரையா தோதி
மணிபூண்டு பொடிபூசி மலக்கூ டாகு
மிந்தவுடற் றுறக்கவர மொன்று வேண்டு
மிறுதியிலெட் கடைசருவா யெளிய னேற்கே. (24)

## அறுசீர் விருத்தம்.

தோலாடை யுடுத்தரவக் கச்சார்த்த வில்வவனத்
தோன்று லன்பாய்க்
காலாடு நடங்கண்டு போற்றிமனங் களித்தேகக்
கடைக்க ணிப்பாய்
பாலாடை கலந்தவமு துண்டொதிபோல் வளர்த்துமிகப்
பருத்துப் பொய்மை
மேலாடும் புழுக்கூட்டை யுயிர்துறக்குங் கடைநாளில்
வினையி னேற்கே. (25)

## எண்சீர் விருத்தம்.

ஓங்கார மாகியதன் பொருளாய் வேதத்
துண்ணிலவும் பரசிவமே யொருபா னங்கைக்
கோங்காரந் திகழுமுலைக் குறிக ளெண்டோட்
குவடுடையாய் குவித்திடுங்கை குறைப் பாருண்டோ
ஆங்காரத் தாலயர்ந்த கடையேன் மெய்விட்
டகலும்போ தருச்சித்துன் னருளார் மேனிப்
பாங்கார வுட்டரிக்கும் பண்பு தாராய்
பரிந்துவந்து வில்வவனப் பதியாள் வேந்தே. (26)

## அறுசீர் விருத்தம்.

சந்தமறை நின்றோலந் தருமளகைச் சிவாவுனையான்
றருசித் தல்காப்
பந்தமறுத் தும்பர்பிரான் பரந்தாம ஞன்முகத்தோன்
பதிக்கு மேலா
யந்தமுறு முத்திதரு மைந்தெழுத்தைச் சிந்தித்தா
கமத்தா ரோதிக்
கந்தமல ராலருச்சித் துயிர்கடைநா டுறக்கவருள்
காட்டம் மானே. (27)

## எண்சீர் விருத்தம்.

வாஞ்சித்தா ருட்புகுந்தா னந்த மூட்டும்
வானமுதே காமாட்சி வளர்த்த மாக்கிழ்க்
காஞ்சித்தா னத்துமுக்கட் கரும்பே வேடர்
கைப்படுத்த மாவிரைக் கனியே பார்சூழ்ந்
தாஞ்சித்தா லயர்க்கேதும் வல்ல னல்ல
ஞயினுனின் பாற்குன்று வடிமை யாமாற்
ருஞ்சித்தா யொளிர் விடைமே லுமையா ளோடுந்
தமியேன்கண் காணவந்தாள் சாங்கா லத்தே. (28)

### அறுசீர்விருத்தம்.

கள்ளிருக்கு மலர்க்கொன்றை கமழ்சடையா யளகேசா
கடல்சூழ் ஞாலத்
தெள்ளிருக்கு மிடமகலா திருந்தாயெ னுட்கிடக்கை
யேனோ தோய்
புள்ளிருக்கும் வேளூரிற் பவந்தீர்க்க மருந்துதவும்
புனிதா வந்தத்
துள்ளிருக்குங் கானுநின் னொளியுருவ மடியேன்கட்
கொளிரச் செய்யே. (29)

### எண்சீர் விருத்தம்.

தும்புருவு நாரதனும் பண்பிற் பாடுஞ்
சாதமுவந் தருட்செவியின் மடுத்த தொல்லோய்
யம்புருவ விழிமடவா ளஞ்ச வெள்ளி
யடுக்கலெடுத் தானுக்கு மருள்செய் தாண்டாய்
செம்புருவிற் சிலையுருவிற் றிகழ்ந்து சீவ
செகத்துருவிற் காந்தசிவா சிறியேன் செத்து
வம்புருவ மெய்விடுங்காற் றரிசித் துன்பேர்
வழுத்தவரு டாவளகை மன்னுந் தேவே. (30)

### அறுசீர் விருத்தம்.

மணியொளிரும் பணியாரந் தரித்தளகை வளர்வீரை
மரத்தின் கீழாய்த்
தணியமய நீர்த்தடியார் பிறவிக்கோர் மருந்தாகித்
தழைத்தாய் பீறற்
றுணியதென வுடல்போக்கி யானகலுங் கடைநாளிற்
றொடர்பா யுன்ற
னணியதிரு வடிபோற்றி யந்தகனைப் பிடருந்த
வாற்ற ருவே. (31)

## எண்சீர் விருத்தம்.

அந்தரத்தா ரண்டாயன் றிருமால் காணு
வடிகேளின் னருட்குரியார் ரகந்தாய் மைத்தா
யெந்தரத்தார் போல்விழித்துங் குருடாய் மூன்று
மிச்சையறுத் தைந்தடக்கித் தவமேற் கொண்டார்
சிந்தரத்தா ரிலேவேற்கண் மடவா ரேவல்
செய்துதவஞ் சிந்தினனென் செய்வே னீல
கந்தரத்தாய் சிவன்போங் கடைநாள் வந்து
காட்சிதரு வாயளகைக் கருணை வாழ்வே. (32)

## அறுசீர் விருத்தம்.

தெண்ணீரா லிடுங்கோலந் தனையொத்துக் காக்குமுடற்
சிறுமை யென்று
துண்ணிரும் பாலமுது முண்டுவளர்த் துரிமைகொண்டே
யுறவோர் கூடி
பண்ணிராற் சுமந்தெரிவா யிடுங்கடைநாள் வீரேசா
வாய்ப்பத் தாராய்
விண்ணிரு மதியிருக்குஞ் செஞ்சடையுந் தோளுடையு
மெலிவு தீர்த்தே. (33)

## எண்சீர் விருத்தம்.

வல்லசித்த ருகிக்கல் லானை யுண்ண
மணிக்கன்ன றந்தசிவா மனுவொன் றேழை
மல்லசித்தத் தொழின்மறலி கட்பட் டெய்த்து
வருந்தாமற் கடைநாள்முன் வந்து காப்பாய்
கல்லசித்தத் தாருணர்விற் காணு நின்றன்
கற்பவளத் திருவுருவ நாயேன் கண்டு
புல்லசித்தற் கெடவுகிப் பொய்யா மெய்யைப்
போக்கவரத் தாவளகை புரந்த கோவே. (34)

### அறுசீர் விருத்தம்.

மருங்காலங் குடியிருந்து நால்வருக்குப் பொருளுரைத்தாய்
வழக்கா ருகப்
பொருங்கால னெதிர்போந்து பூசனுரு மற்காப்பாய்
பொன்றுங் காலம்
வருங்கால முணர்ந்தார்க்கு மறிவரிய வில்வவனு
மணிநீர் வாரி
யொருங்கால முண்டுதெய்வ மகளிர்கழுத் தணிகாத்த
வொப்பில் லோயே. (35)

### எண்சீர் விருத்தம்.

மதவேடன் பொற்புரத்திற் கட்டிவைத்த
வரதாவில் வாரண்ய மகிபா வோலங்
கதைவேற்கைப் பாசமெறி வன்கட் காலன்
கட்பட்டு வருந்தாமற் கடைநாட் காப்பாய்
புதைவேரற் றடிசாய்ந்த மரம்போற் றெண்ணீர்ப்
புவியி லுடல் விழும்போது பூசை முற்றித்
துதைவேதப் பொருளாநின் பவள வண்ணச்
சொரூபந்தா விடை தோற்றித் தொழமுன் வந்தே. (36)

### அறுசீர் விருத்தம்.

முண்டகத்தா ளொடுவாணி யிருமருங்கிற் பணிகாப்ப
முந்நீர் வைப்பிற்
பண்டகத்தா ரருடாங்கிப் பாண்டியர்கோன் மகளாய
பாவை யோடுங்
கண்டகத்தா மழவிடையிற் கண்டடியேன் றரிசிக்கக்
கருணை கூர்ந்து
மண்டகத்தாழ் வினைகறுக்கு மளகேசா கடைநாண்முன்
வந்தாட் கொள்ளே. (37)

## எண்சீர் விருத்தம்.

அந்தத்தை யோகொடிய நமனர் கைப்பட்
டயாமற் றடுத்தடியேற் கபய மீய்ந்து
பந்தத்தைத் தகர்த்திமையப் பாவை யோடும்
பாய்விடையூர்ந் தடிபரவும் பரிசு தாராய்
தந்தத்தை யொடித் தொருகை தரித்த மூத்த
தந்திக்கு மாயாச்சூர்ச் சலதி மாந்தக்
குந்தத்தை விடுத்தாற்குந் தந்தை யாய
குணக்குன்றே விரைநிழற் குறிக்கொண் டாயே. (38)

## அறுசீர் விருத்தம்.

பொல்லாத புலாலெலும்புநரம்பு மயிர் புண்ணீர்தோல்
புணர்ந்த யாக்கை
கல்லாலும் வலியதெனக் களித்திறுமாந் துரிமைகொண்ட
கடையே னத்தை
யெல்லாருங் காணவிருந் தெரிக்கிடுநா ளென்செய்வே
னிரக்கங் காட்டிச்
சொல்லாலுஞ் சொலவரியவில்லவனை முன்னின்று
துணைசெய் வாயே. (39)

## எண்சீர் விருத்தம்.

குல்லைத்தா ரணிவோனும் பூவந் தோனுங்
கோடியெனு முப்பத்து மூவர் தானும்
மல்லைத்தான் புரிமறலி வீசும் பாச
வலிமாய்ப்ப தரிதென்னின் மதியி னையேன்
பல்லைத்தான் றிறந்திடினு முளரோ காக்கும்
பரிசுடையார் நின்கருணைப் பரவை மூழ்கி
வல்லைத்தா மீறுருவாய்ச் சரிக்க வந்தம்
வார்தருவா யளகைநகர் மன்னுந் தேவே. (40)

## அறுசீர் விருத்தம்,

செப்பனைய முலைப்பொறையாற் றேய்ந்தவிடைப் பொற்பாவை
தென்னன் கன்னி
யொப்பனையா மனையோடு முனையேற்றில் யான்காண
வுவந்து வாராய்
துப்பனைய திருமேனிச் சோதியைக்கண் ணாற்பருகித்
தோலாக் கானத்
தப்பனைய தாய்க்கரக்கு முடல்விடுமா லந்தத்தி
லளகை வேந்தே. (41)

## எண்சீர் விருத்தம்.

மாணிக்கம் விற்றொருநாள் விறகு விற்றாய்
வளைவிற்றாய் மடவார்க்கு மாம னாகிக்
காணிப்பொன் பெறவந்தா யெளிதோ நின்றன்
கருணையினை யல்லாது பற்றொன் றில்லேன்
தோணிக்கு நிகராமுன் றிருத்தாட் கண்டு
தொழுதிறக்கக் காதல்கொண்டேன் றாவெள் ளேற்றின்
மாணிக்கு வயதளித்த வள்ளால் வாராய்
மண்டுறக்கும் போதுவில்வ வனத்தம் மானே. (42)

## அறுசீர் விருத்தம்.

அன்புள்ளார்க் கெளிதாகி வேட்கையறத் தருவினை
யரசே போதப்
பொன்புள்ளார் வேளூரா புனன்மொக்கு ளாஞ்சடத்தைப்
போக்கு மந்நா
ளென்புள்ளா ரூன்வடிவத் திருணீக்கிப் பெற்றமிவர்ந்
தெனையாட் கொண்டு
முன்புள்ளா ரறியாத முடிச்சடையும் பான்மதியு
முடிக்கத் தாவே. (43)

## எண்சீர் விருத்தம்.

மாற்றுயர்ந்த பொன்போலுங் குணத்தார்க் கன்றி
மால்பிரமன் மகபதிநான் மறைக்கும் யார்க்குங்
கீற்றுமதிச் செஞ்சடையுந் தாளுங் காட்டாக்
கிரிசகடை நாட்காலன் கிலேசந் தீர்ப்பாய்
சேற்றுகந்த தாமரையிற் சங்க முத்தின்
செறுவளைத்த சாக்கைநகர்ச் செல்வா வெள்ளை
யேற்றுகந்தா யுமையணங்கோ டெழுந்து நாயேற்
கெதிர்தோன்றி யிறப்புறுநா ளின்பந் தாவே. (44)

## அறுசீர் விருத்தம்.

தன்றாதை தாளெறிவார் தலைமகனைத் தலைகொய்வார்
தங்கட் கெல்லாம்
பொன்றாதை விடுதவும் புனிதா நல்விரேசா
புனலிற் றீட்டாய்க்
குன்றாதை யோமறையுங் களேபரத்தை யெரியிடுநாட்
குல்லைத் தாரான்
மன்றாதை தாதையென வழுத்துறுமெந் தாயெருதில்
வந்தாட் கொள்ளே. (45)

## எண்சீர் விருத்தம்.

வித்தாகுங் கூழேபோல் வினையால் வந்த
மெய்யெனினுந் திச்சருகாய் வெதுப்பு மேன்மைக்
கத்தாநீ தானன்றே மாபா விக்குங்
கருணைபுரிந் தறநிறுத்திக் காட்டாய் நின்றாய்
எத்தாலு மினிப்பிறவா வண்ணம் நாயேற்
கின்னருள்செய் துமையணங்கோ டிடப மூர்ந்து
சித்தாவீ ரேசாபொற் பவள வண்ணா
தெரிசனந்தந் தந்தத்திற் சென்மம் போக்கே. (46)

### அறுசீர் விருத்தம்.

கையேந்தும் பொற்கிரியா சாக்கைநகர் வீரேசா
கடைநாள் வந்து
மையேந்து மனக்கூற்றன் வலிக்காமற் றடுத்தருள்வாய்
மால்வெள் ளேற்றிற்
பையேந்தும் பொடிபூசிக் கண்டிபுனைந் தைந்தெழுத்தும்
பகர்ந்து ணெக்கு
மையேந்தும் பவளநெடு மலையுருவந் தெரிசிக்க
வரமதொன்றே. (47)

### எண்சீர் விருத்தம்.

வாரணஞ்சூழ் புவியேழும் வணங்க வீரை
மாத்தின்கீ ழங்குரித்து வனவே டற்கும்
பூரணந்தந் தொளியுருவிற் கலப்பித் தின்பம்
புணர்த்தியவீ ரேசாநீ புகல்மற் றில்லேன்
மாரணந்தந் துடனீக்குங் கடைநாட் டுட்ட
மறலிதுயர் வாராமன் மழவெள் ளேற்றில்
நாரணன்றன் பின்னவளோ டுருவந் தோற்றி
நான்கண்டு தரிசிக்க நலந்தா ராயே. (48)

### அறுசீர் விருத்தம்.

நத்தேறு திருக்கரத்து நாரணனு நான்முகனு
நாடுங் கொன்றைக்
கொத்தேறுஞ் செஞ்சடையா சாக்கைநகர் வீரேசா
குறுகி நெஞ்சம்
மத்தேறி யுடைதயிர்போன் மாழ்கினனுற் கடைநாண்முன்
வந்து மாயப்
பித்தேக விடையிலருட் டிருமேனித் தரிசனந்தா
பிழைக டீர்த்தே. (49)

## எண்சீர் விருத்தம்.

சத்தாகிச் சித்தெனலாய்ப் பரமா னந்தந்
　　　தானாகிப் பொழிலேழுந் தம்பாற் றோற்றும்
வித்தாகி விளைவித்து வினைப்பா லூட்டி
　　　வேண்டுதல்வேண் டாமையிலா வீரே சாநின்
றொத்தாடு முயைியொன்று தரிசித் துன்னை
　　　யுண்ணிறுத்தி யுயிர்துறக்க வுழுவ லன்பன்
பித்தாகி விழைகின்றே னகமச் சொற்
　　　பேணிநிய மம்புரிந்து பிரியச் செய்யே. (50)

## அறுசீர் விருத்தம்.

கற்பகடந் தருவிரைக் கானமர்ந்த வீரேசா
　　　கதிமற் றில்லே
னற்பனடுத் தேறுவல் லறக்கொடிய னமன்கடைநா
　　　ளடல்செய் யாமன்
முற்பதமொன் றெடுத்தாண்ட முறைவழுவா தோம்பியருண்
　　　முழுதுங் காட்டிப்
பொற்பவள வுருக்காட்டி யுளமகிழ விடபமிசைப்
　　　பொலிந்து வாவே. (51)

முற்றுப்பெற்றது.






உ சிவமயம்.

| பக்கம் | பாட்டு | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 2 | 5 | 3 | பொழிகள் | பொழில்கள் |
| 3 | 17 | 2 | கண்ணினை | கண்ணிணை |
| 13 | 3 | 8 | பொய்படு | பொய்ப்படு |
| 23 | 24 | 24 | கடைவரய் | கடைவாய் |